# கைம்மாறு

"எங்கே லக்ஷ்மி, இந்த மழையில் ஓடி வந்தாய்?" என்று கேட்டாள் குமுதா.

"வருகிற வழியில் மழை பிடித்துக் கொண்டு விட்டது. வழி விடு- வழி விடாமல் மறைத்துக்கொண்டு நிற்கி றாயே?" என்று திருப்பிக் கேட்டு விட்டுச் சிரித்தாள் லக்ஷ்மி.

"வா, வா. அதென்ன பொட்டலம் கையில்?"

லக்ஷ்மி தன் மேல் புடவைக்குள்ளிருந்து ஒரு பொட்டலத்தை எடுத்துக் கவலை யுடன் நோக்கினாள்.

"நனைந்து விட்டதா?" என்று கேட்டாள் குமுதா.

"அதுதான் பார்த்தேன். நல்ல காலம், நனைய வில்லை."

"இந்த உன் புடவை, ரவிக்கையை விழுத்து எறிந்து விட்டு, இவைகளைத் தரித்துக்கொள். பிறகு பேசிக் கொள்ளலாம்."

லக்ஷ்மி, தன் தோழி அளித்த மாற்று உடைகளை அணிந்துகொண்டு, 'அப்பாடா!' என்றுரைத்தவண்ணம் நாற்காலியில் அமர்ந்தாள்.

"குமுதா, இன்றைக்கு யாரோ பட்டணத்திலிருந்து வந்தார்கள். அவர்களிடம் அம்மா இரண்டு புடவைகள் அனுப்பியிருக்கிறாள். இதில் எது வேண்டுமோ அதை எடுத்துக்கொண்டு, மற்றதைத் திருப்பி அனுப்பிவிடு, இல்லா விட்டால் யாருக்காவது விற்றுவிடு என்று எழுதியிருக்கிறாள். அம்மாவின் சாமர்த்தியமே சாமர்த்தியம்!" என்றாள் லக்ஷ்மி.

"இதில் சாமர்த்தியம் என்ன இருக்கிறது?"

"உனக்குத் தெரியாது எங்கள் அம்மாவை! ஒரு புடவை அவர்கள் பரிசாக அனுப்பிவிட்டார்கள். மற்றதை நான் எங்கே கொண்டுபோய் விற்பது? மாப்பிள்ளையே பணம் கொடுத்து வாங்கி விட்டால், இரண்டும் ஜதையாக இருக்குமே என்று அம்மாவின் எண்ணம். நாசூக்காக எழுதியிருக்கிறாள். 'இதை நான் அனுப்புகிறேன். கூட இருப்பதை நீயே விலை கொடுத்து வாங்கிக்கொள்' என்று எழுதினால் யார் வாயை மூடிக் கொண்டிருப்பார்கள்? "நாங்கள் வாங்குவதற்கு, இவள் என்ன சிபார்சு என்று திருப்பிக்கொள்ள மாட்டார்களா?" என்று விளக்கி விட்டு, கலகலவென்று சிரித்தாள் லக்ஷ்மி.

"உண்மைதான், லக்ஷ்மி. இந்த உலகத்தில் நாசூக் காகப் பேசிப் பழகினால்தான் பிழைக்கலாம்" என்று

மொழிந்து விட்டுப் பெருமூச்செறிந்தாள் குமுதா. அவள் கண்கள் சிவந்து, பனி படர்ந்து பளபளத்தன. அவள் திருஷ்டி எங்கோ சென்றது. ஏக்கத்தின் சாயை அவள் முகத்தில் படர்ந்தது.

லக்ஷ்மி தன் சிரிப்பை ஒழித்து, சட்டென்று குமுதாவின் அருகில் நகர்ந்து, அவள் தோளைப் பிடித்து, அவள் முகத்தைக் கூர்மையாக ஆராய்ந்தாள்.

"என்ன குமுதா?" -அவள் குரலில் கவலை தொனித்தது-

"ஒன்றுமில்லை, லக்ஷ்மி" என்று சட்டென்று சமாளித்துப் பேசினாள் குமுதா.

"நீ சொன்னால்தான் விடுவேன்" என்றாள் லக்ஷ்மி.

"என் பெற்றோர்கள் நாக்ஷக்காகப் பேசத் தெரியா தவர்கள். இவர்கள் அதிசாமர்த்தியசாலிகள். இவர்கள் ஏதோ கேள்விகள் கேட்கக் கேட்க நாங்கள் கள்ளங் கபடமற்றுப் பேசியது, இப்பொழுது மனஸ்தாபமாக முடிந்திருக்கிறது."

"என்னதான் நடந்தது, விவரமாகச் சொல்லேன்."

"அதெல்லாம் இப்பொழுது எதற்கு லக்ஷ்மி? ஏதோ நடந்தது, இன்று என் பெற்றோர்கள் எப்படியிருக்கிறார்கள் என்றுகூடத் தெரியவில்லை. கடிதப் போக்குவரத்து கிடையாது. தப்பித் தவறி அவர்கள் எழுதிவிட்டால், அன்று வீடு நிர்த்தூளிப்படுகிறது. நானாக என்றாவது ஒருவரி எழுதத் துணிந்தால், அன்றே நான் அங்கேயே போய்விட வேண்டுமாம்." குமுதா தன் கண்களிலிருந்து மடைபோலக் கொட்டிய நீரைத் துடைத்துக்கொண்டாள்.

"குமுதா, என்னிடம் சொன்னால் என்ன? உன் பெற்றோர் இருக்கும் இடத்தைச் சொல், நான் அவர்களுக்கு எழுதி, உனக்கு உதவி புரிகிறேன்" என்றாள் லக்ஷ்மி.

"லக்ஷ்மி, இதெல்லாம் குணப்படாத வியாதி. அவர்களே மனம் திரும்பும் வரை, நானும் ஒன்றும் செய்யப்போவதில்லை. கடவுள் ஒருவர் இருக்கிறார் அல்லவா, என்னைப்போன்ற திக்கற்றவர்களுக்குத் துணை புரிய?"

"ஏன் அப்படிப் பேசுகிறாய்? என் மனம் என்னவோ செய்கிறது."

"என்னை மன்னித்துவிடு, லக்ஷ்மி. நான் எதையும் நினைப்பதே இல்லை. கடந்த நாட்களைக் குறித்தோ, கடக்கவிருக்கும் நாட்களைப்பற்றியோ கவலைப்படுவதே இல்லை. இன்று காலை இவர் ஏதோ வெந்த புண்ணில் வேலிடுவது போலப் பேசினார். அதன் பயனாக, என்னையும் மீறி, இன்று உன் முன் வசத்தை இழந்து விட்டேன். 'தீபாவளிக்கு என்ன புடவை வாங்கப் போகிறீர்கள்?' என்று கேட்க, அவர் எரிந்து விழுந்தார்! 'உன் பிறந்தகம் இருக்கும் லக்ஷணத்துக்கு ஆசை வேறா?' என்றார். நானும் ரோஷம் மேலிட்டு, 'அவர்கள் வாங்கிக் கொடுக்காத பாவிகள் அல்ல. நீங்கள்தான் அவர்களை ஜாதியற்றவர்களாகக் கருதினீர்கள்' என்றேன். வார்த்தை தடித்து, கடைசியில் அவர் கோபத்துடன் காரியாலயம் போய் விட்டார். அப்பொழுது முதல் கவலைப் பட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தேன்..."

லக்ஷ்மி, தான் கொண்டுவந்த புடவைகளைக் கட்டி எடுத்து வைத்துவிட்டு வந்தாள். தன் தோழியின் கதையைக் கேட்டதும், அவள் நயனங்கள் நனைந்து விட்டிருந்தன. அவைகளைத் துடைத்துக்கொண்டாள்.

"லக்ஷ்மி, புடவைகளைக் காட்டு. நீ கேட்டதற்கு நான் பதில் சொல்லவில்லையே..."

"ஒன்றும் வேண்டாம்" என்றாள் லக்ஷ்மி சலிப்புற்ற குரலில்.

"எனக்கும் பார்க்கவேண்டும் போலிருக்கிறது, காட்டு" என்று கூறிக் கொண்டே, குமுதா பொட்டலத்தை மீண்டும் பிரிக்கலானாள்.

லக்ஷ்மி உணர்ச்சியற்று எங்கோ பார்த்துக்கொண்டு அமர்ந்திருந்தாள்.

"லக்ஷ்மி, இந்த நீலப் புடவைதான் மிகவும் பிடித்திருக் கிறது. அதை அந்த ருத்திராட்சப் பேட்டு எடுத்துக் காட்டு கிறது" என்று உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்தாள் குமுதா.

லக்ஷ்மி அவளைப் பார்த்தாள். பிறகு சட்டென்று எழுந்து வெளியே எட்டிப் பார்த்துவிட்டு வந்து, "குமுதா, நான் வீட்டுக்குப் போகிறேனடி, மழை நின்றுவிட்டது" என்றாள்.

"லக்ஷ்மி, இரு, காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகலாம்" என்றாள் குமுதா.

"சீக்கிரம் ஆகட்டும். நான் அவரை வீட்டில் விட்டு விட்டு வந்தேன். நான் திரும்பின பிறகுதான் அவர் ஆபீஸ் போகவேண்டும்.

காப்பியைச் சாப்பிட்டுவிட்டு, பொட்டலத்தைத் தூக்கிக்கொண்டு லக்ஷ்மி கிளம்பியபோது, குமுதா அவளிடம் வந்து, "லக்ஷ்மி, இந்த நீலப் புடவையை இங்கே வைத்துவிட்டுப் போயேன். அவர் மனம் குளிர்ந் தால்..." என்றாள்.

"ஒன்றும் வேண்டாம். என்னால் உபகாரமில்லா விட்டாலும், அபகாரம் வேண்டாம்" என்று வெடுக் கென்று கூறிவிட்டு, லக்ஷ்மி புடவைகளை எடுத்துக் கொண்டு வேகமாக வெளியேறிவிட்டாள்.

"லக்ஷ்மி, பிறகு சாவகாசமாக வருகிறாயா?"

"ஆகட்டும்" என்று லக்ஷ்மியின் குரல் வெகு தொலைவிலிருந்து கேட்டது.

  

**ல**க்ஷ்மியும், அவள் கணவன் சக்ரபாணியும் கதவைத் தட்டும்போது, குமுதாவின் வீட்டிற்குள் பலத்த வாக்கு வாதம் நடந்துகொண்டிருந்தது. லக்ஷ்மியைப் பார்த்தான் சக்ரபாணி. லக்ஷ்மி உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

"எதற்காகக் குத்திக் குத்திக் காட்டுகிறீர்கள்?உங்கள் புடவையே எனக்கு இனி வேண்டாம்" என்று குமுதா சற்று ஆத்திரமாகவே உரைத்துக் கொண்டிருந்தாள்.

"என்னை விட்டால், வேறு யார் உனக்குப் படைக்கப் போகிறார்கள்?" என்று கேட்டு, எகத்தாளமாகச் சிரித்தான் குமுதாவின் கணவன் சாரநாதன்.

மெல்லக் கதவைத் தட்டினான் சக்ரபாணி.

உள்ளே தம்பதிகளின் சச்சரவு அறுபட்டது. சற்று கழித்து கதவு திறக்கப்பட்டது.

"வாருங்கள், வாருங்கள்!" என்று அழைத்தான் சாரநாதன்.

வந்தவர் யார் என்று பாராமலேயே, சமைய லறைக்குள் மறைந்து விட்டிருந்தாள் குமுதா.

"குமுதா எங்கே?" என்று கேட்டுக் கொண்டே லக்ஷ்மி சமையலறைக்குச் சென்றாள்.

"சாரநாதன், உன்னிடம் நான் கொஞ்சம் பேச வேண்டும், வெளியே வருகிறாயா? எனக்கு ஒரு நெருக்கடி. அதினின்று நீதான் காப்பாற்றவேண்டும்" என்றான் உணர்ச்சியுடன் சக்ரபாணி.

"என்ன, சக்ரபாணி?" என்று வியப்புடன் கேட்டுக் கொண்டே வந்த நண்பனை இழுத்துக்கொண்டு, வீதிக்குச் சென்று விட்டான் சக்ரபாணி.

அவர்கள் திரும்பிவர சற்று நேரமாயிற்று. அவர்கள் வாசலறையில் நுழையும்போது, லக்ஷ்மி நீல நிறப் பட்டு புடவையைக் குமுதாவின் கையில் வைத்து அழுத்தி கொண்டிருந்தாள். குமுதா கைகளை உதறிக்கொண்டு, அதை வாங்க மறுத்துக்கொண்டிருந்தாள்.

"நான் ஒருக்காலும் வாங்கமாட்டேன். சிநேகம் என்றால் பரிசு அளிப்பதற்கு அளவு இல்லையா? நூறும், இரு நூறும் அளிக்கும் நிலையில் நீங்கள் இருக் கிறீர்களா...?"

குமுதா இன்னமும் எவ்வளவோ பேசிக்கொண்டே போயிருப்பாள். ஆனால், சாரநாதன் குறுக்கிட்டு, அவளை அடக்கினான்.

"குமுதா, புடவையை வாங்கிக் கொள். பெரிதாக மறுக்க வந்துவிட்டாள்! பிரியமாக அளிக்கும் பரிசுக்கு விலை, மதிப்புண்டா?" என்றான் அவன்.

குமுதா ஆச்சரியத்துடன் கணவனை நோக்கினாள். தோழியைப் பார்த்தாள். தோழியின் கணவனை அண்ணாந் தாள்.

லக்ஷ்மி பெருமிதத்துடன் முறுவலித்துக்கொண்டு நின்றாள். சாரநாதன் மனைவியைக் கண்டிப்புடன் நோக்கிக் கொண்டிருந்தான். சக்ரபாணி மரியாதையுடன், ஒருவித சகோதர பாவத்துடன் கேட்டுக்கொள்ளும் விதமாகப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"பண்டிகையன்று அவர்கள் கொடுப்பதை மறுக்காதே. எனக்கும்தான் வேஷ்டி கொடுக்கிறார்கள், நான் வாங்கிக் கொள்ளவில்லையா?" என்று சாரநாதன் மீண்டும் கூறவும், குமுதா வேறு வழியின்றி, சிநேகிதி அளித்த தாம்பூலத்தைப் பெற்றுக்கொண்டாள்.

சக்ரபாணியும், லக்ஷ்மியும் கொஞ்ச நேரம் அளவளாவி விட்டுப் பிறகு கிளம்பினார்கள்.

"சக்ரபாணி, நாளைக்குத் தீபாவளி முதல் இரவுப் பண்டிகைக்கு இங்கே வந்துவிடுங்கள். காலை கங்கா ஸ்நானத்துக்கு நாங்கள் அங்கே வந்தவிடுகிறோம்" என்றான் சாரநாதன்.

"ஓ! அப்படியே!" என்று ஒப்புக் கொண்டான் சக்ரபாணி.

அவர்கள் சென்ற பிறகு தன் மனைவியிடம் நெருங்கி மிகவும் தோழமையுடன் சந்தோஷமாக, உல்லாசமாகப் பேசலானான் சாரநாதன்.

"குமுதா, உனக்குப் படைப்பார்கள் இல்லை என்று நான் சொல்லிக்கொண்டிருக்கும்போதே உனக்குப் புடவை பரிசு என்ன, பண்டிகைக்கு அழைப்பு என்ன-பிரமாதமாக அமைந்துவிட்டதே! குமுதா, இன்றைக்குத் தான் நமக்குத் தலை தீபாவளி?" என்று பேசிக்கொண்டே குமுதாவை நெருங்கினான் அவள் கணவன்.

"நான் ஒன்றும் அந்தப் புடவையைக் கட்டிக் கொள்ளப்போவதில்லை" என்றாள் குமுதா, அழுத்தம் திருத்தமாக.

"ஏன் மாட்டாயாம்?"

"காரணத்தோடுதான்."

"அதெல்லாம் ஒன்றும் நடவாது, நினைவிருக் கட்டும். லக்ஷ்மியின் மனம் உடைந்துவிடும். ஒருவரைச் சந்தோஷப்படுத்த முடியாவிட்டாலும், அவர்களைத் துன்பப்படுத்த நமக்கு யாதொரு உரிமையும் கிடையாது" என்றான் சாரநாதன்.

"எனக்கு சாஸ்திரம் படிக்கிறீர்களா?" என்று சுடச் சுட கேட்டாள் குமுதா.

"எனக்கேதான் படித்துக்கொண்டதாக இருக் கட்டுமே?"

"நல்ல தீபாவளிதான் இது! ஒளியை நிரப்புகிறது" என்றாள் குமுதா காரமாக. கணவன் இளகிப் பேசப் பேச, அவள் இதயம் கடினமாகிக்கொண்டே வந்தது போலும்.

"குமுதா! உனக்கு என்மீது கோபம் இருக்கலாம். அதற்காக லக்ஷ்மியைத் தண்டிக்காதே. இன்று சக்ரபாணி ஒரு விஷயம் சொல்லி என்னிடம் கெஞ்சிக் கேட்டுக் கொண்டான். அதைக் கேட்கவே மனம் உருகுகிறது. லக்ஷ்மிக்கு ஒரு சகோதரி இருந்தாளாம். அவளும் இவளும் உயிரே ஒன்றாக இருந்தார்களாம். தீபாவளி என்றால் இருவரும் ஜதையாகப் புடவை வாங்கிக் கட்டிக் கொள்வார்களாம். அவள் போன பிறகு வருஷா வருஷம் லக்ஷ்மி தன் புடவை போலவே ஒன்று வாங்கித் தனக்கு மிகவும் பிடித்தவளான ஒரு தோழிக்குக் கொடுக் கிறாளாம். உன்னைக் கண்டால் அவளுக்குத்தன் உடன்

பிறந்தவளாகவே தோன்றுகிறதாம். அவள் வெகுமதியை மறுக்காதே. அவளையே வதைப்பது போலாகும் அச் செய்கை 'நீ இதற்கு இணங்காவிட்டால், இந்தத் தீபாவளி தினம் மட்டுமல்ல, வெகு நாள் வரை என் மனைவி மகிழ்ச்சியே மறந்து நடமாடுவாள்' என்றான் சக்ரபாணி" என்றான் சாரநாதன்.

குமுதா கணவனையே சற்று நேரம் உற்று நோக்கிக் கொண்டிருந்துவிட்டுப் பிறகு பேசாமல் இருந்துவிட்டாள். அன்று மாலை வரை மௌனத்திலேயே முடிந்தது. பிறகு சக்ரபாணி தம்பதிகள் வந்த பின்னர்தான் எல்லோரும் வெளியே மற்ற வீதிகளின் கோலாகலங்களை ரசித்துப் பண்டிகைக் சாப்பாட்டிலும் முனைந்தனர்.

காலை மங்கள ஸ்நானம் முடிந்தது. சக்ரபாணியும், சாரநாதனும் கொடி உடுத்திக்கொண்டு, சக்ரபாணியின் வாசற் பக்கத்து ஹாலில் பட்சணங்களைச் சுவைத்துக் கொண்டிருந்தனர். அதற்கு அடுத்து கூடத்தில் லக்ஷ்மியும் குமுதாவும் பேசிக்கொண்டிருந்தனர்.

"என்ன, லக்ஷ்மி. நீ செய்த வேலை எனக்குத் துளிகூடப் பிடிக்கவில்லை. பொய்யும் புளுகும் சொல்லி இந்தப் புடவையை எதற்காக எனக்குக் கொடுத்திருக் கிறாய்? என்னால் இந்தப் பித்தலாட்டத்துக்கு உடந்தை யாக இருக்க முடியாது, ஆமாம்!" என்றாள் குமுதா.

லக்ஷ்மி கலகலவென்று சிறு குழந்தை போலச் சிரித்தாளே தவிர, வேறு ஒன்றும் பதில் சொல்லவில்லை.

"லக்ஷ்மி, நீ இந்தக் குட்டி நாடகம் நடத்தாவிட்டால் இந்தத் தீபாவளி ஒளியற்ற துர்நாளாக இருந்திருக்கும். அவருக்கும், எனக்கும் ஒரு வாரமாக எலியும் பூனையும் உறவு. அவர் புடவை வாங்கிக் கொடுத்தாலும் உடுத்துவ தில்லை என்ற தீர்மானத்தில் இருந்தேன். அதுவரை

உன்னைப் பாராட்ட வேண்டியதுதான். என்ன கைம்மாறு செய்வதென்றே தெரியவில்லை. இருந்தாலும் இவ்வளவு பெரிய ஜரிகைப் புடவையை நான் வாங்கிக் கொள்ள மாட்டேன். நீ அதற்கு விலையாவது வாங்கிக்கொண்டு தான் ஆகவேண்டும்."

"என்ன 'ஆகவேண்டுமோ' என்ன வேண்டாமோ! செய்து 'ஆக வேண்டும்,' சொல்லி 'ஆக வேண்டும்.' இந்த 'ஆக வேண்டும்' என்ற சொல்லிக் கண்டாலே எனக்கு எரிச்சல். வாழ்க்கையைச் செவ்வனே நடத்தி 'ஆக வேண்டும்' என்பதை..."

"உன் பிரசங்கம் இருக்கட்டும். வார்த்தையை மாற்றாதே, லக்ஷ்மி."

"வார்த்தையை மாற்றவில்லை, குமுதா. நீதான் என்னவோ. 'மைம்மாறு,' 'விலை' என்றெல்லாம் பேசி என்னைக் கிளப்பி விட்டாய். என் அனுபவத்தைக் கேட்டால் இந்தப் பரிசு ஒரு பிரமாதமாகப் படாது உனக்கு.

"என் வாழ்விலும் ஒரு நாள், அது தான் என் தலை தீபாவளிக்கு, இந்த 'ஆகவேண்டும்' கோரத தாண்டவம் புரிந்தது. மாப்பிள்ளைக்குத் தங்க ரிஸ்ட் வாட்ச் சங்கிலி, பெண்ணுக்கு மூன்று சவரனுக்குக் குறையாமல் மாங்காய் மாலை... எல்லாம் செய்து 'ஆக வேண்டும்' என்று சம்பந்திகளிடமிருந்து உத்தரவுகள் வந்து விட்டன..."

"உஷ், லக்ஷ்மி, உரக்கக் கத்துகிறாயே... புருஷர்கள் காதில் விழப் போகிறது?" என்று அடக்கினாள் குமுதா.

லக்ஷ்மிக்குக் காது செவிடாகிவிட்டதோ, என்னவோ, முன் போலவே குலைத் தாழ்த்தாமல் பேசிக்கொண்டே போனாள் அவள். "அந்தச் சமயம் என் தகப்பனார் பட்ட பாடு யாருக்குத் தெரியும்? மில்லில் பெரிய மானேஜராக

ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் சம்பளம் வாங்கியதைத்தாதன் உலகம் கண்டேே தவிர, அவர் தன் வீட்டில் ஆறு பெண் களுக்குக் கல்யாணம் செய்வித்து, நான்கு பிள்ளை களுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுத்து, உற்றார் உறவினரைக் காப்பாற்றி, குடும்பத்தைக் கடனில்லாமல் நடத்த முடியாமல் தவித்தழைித நாங்கள்தான் பார்த் தோம். நாங்களும் பார்த்தும் பரிதவித்தோமே தவிர, அவருக்கு ஒரு சகாயமும் பண்ண முடியவில்லை. என் தலை தீபாவளி சமயத்தில் அவர் எல்லா இடத்திலும் கடன் வாங்கிவிட்டு மூழ்கிகிடந்தார். காலணா கொடுப் பாரில்லை. வெளியில் சொல்லிக்கொள்ள முடியாமல் கவுரவம் குறுக்கிட்டது. மானபங்கத்துக்கு அஞ்சி அவர் நடுங்கிக்கொண்டிருந்தபோது தான் சம்பந்தி மாரின் 'ஆக வேண்டும்' நாடகம் தலைவிரித்தாடியது!'' லக்ஷ்மியின் குரல் இன்றுகூடக் கசப்புடன் ஒலித்தது, அந்தப் பழைய சம்பவத்தை விஸ்தரிக்கும்போது.

"அப்பா எப்படியோ நகைக்கடையில் கடன் சொல்லி விட்டுச் செயினும், மாங்காய் மாலையும் வாங்கிக் கொண்டு வந்தார். புடவை வாங்க வழியில்லை. பணம் புரட்ட ஆளில்லை. அப்படி எல்லா திக்குகளையும் சுரண்டி விட்டிருந்தார். ஜவுளிக் கடையில் ஆறு மாதத்துக்கு முன் நடந்த என் கல்யாணக் கணக்கே தீராமல் கிடந்தது. மீண்டும் அங்கே போவதும் மரியாதை இல்லை என்று அவர் தவித்துக்கொண்டிருந்தார். நூல் புடவை ஒன்று வாங்கி வைத்திருந்தார். அதுகூட அவர்களுக்கு எப்படி மூக்கில் வேர்த்து விட்டதோ தெரியவில்லை. பெண்ணுக்கு நூற்று ஐம்பதுக்குக் குறையாமல் பட்டுப்புடவை இருக்க வேண்டும் என்று ஆக்ஞை பிறப்பித்தார்கள்! அப்பா இடிந்துபோய் உட்கார்ந்து விட்டார்." லக்ஷ்மி தன் கண்களைத் துடைத்துக்கொண்டு, இரண்டு முறை எச்சிலை விழுங்கினாள்.

"லக்ஷ்மி, தொண்டையைக் கிழித்துக் கொண்டு இப்பொழுது எதற்கு அந்தப் பழைய நினைவு? என்னைப் பார், என்னை மகிழ்வித்துவிட்டப் பண்டிகையன்று நீ கண்ணில் ஜலம் விடலாமா?" என்றாள் குமுதா.

"பழங் கதையாவது? என்றும் மாறாத புதிய பொன்னான கதையாயிற்றே அது?"

"அப்பா இடிந்து விட்டாரா? அப்பொழுது திடீரென்று வாசலில் மில் முதலாளி கார் வந்து நின்றது. அந்த அம்மாள், நாங்கள் எந்த மாதிரி புடவை வாங்க முடியாமல் தவித்துக் கொண்டிருந்தோமே, அதே புடவையைத் தாம் பூலத்தில் வைத்து என்னிடம் கொடுத்தாள். என் தகப்பனார் மிகவும் வெட்கி, வேண்டாம் என்று தடுத்தும் கேட்கவில்லை அந்த அம்மாள். அவளுக்கு ஒரு பெண் இருந்தாளாம். என் "மாதிரியே இருப்பாளாம். அவளுக்குத்தான் கொடுக்க நான் கொடுத்து வைக்கவில்லை, நீயாவது பெற்றுக்கொண்டால் தான் என் மனம் சாந்தியுறும்' என்று சொல்லிவிட்டு அந்த அம்மாள் பொல, பொலவென்று கண்ணீர் உகுத்துவிட்டாள். அன்று பெற்றுக்கொண்டோம். என் தலை தீபாவளி கம்பீரமாக நடந்தேறியது. பிறகு ஒரு நாள் எங்கள் நிலைமையையும் கூறிவிட்டு, அவர்களுக்கு நன்றி தெரிவிக்கப்போனோம்.

"உன்னைப்போல்தான் 'கைம்மாறு' என்று பேசினோம். அதற்கு அந்த அம்மாள் என்ன சொன்னாள் தெரியுமா?" என்று கேட்டு லக்ஷ்மி சற்று நிறுத்தினாள்.

"சொல், லக்ஷ்மி, கேட்கக் கேட்க ரம்மியமாக இருக்கிறது."

" 'எனக்கு உண்மையில் கைம்மாறு செய்வதென்றால் ஒன்று சொல்லுகிறேன். இதே போல் எந்த இடத்திலாவது யாருக்காவது ஒரு தட்டு ஏற்பட்டால்

அவர்களுக்கு உங்களால் இயன்ற உதவியைச் செய்ய வேண்டும். அவர்கள் மனம் புண்படாமல் செய்ய வேண்டும் அந்த உதவியை- என்றாள் அந்த அம்மாள். அதிலிருந்தே எங்களுக்குத் தெரிந்தேதான் புடவையைக் கொண்டு கொடுத்திருக்கிறாள் என்று. பெண்கூட இருந்தாளோ, இல்லையோ, எவ்வளவு தூரம் உண்மையோ அந்த அம்மாளுக்குத்தான் தெரியும்" என்றாள் லக்ஷ்மி.

"அந்தப் புனிதமான இதயம் யார், லக்ஷ்மி? எந்த ஊரில் இருக்கிறார்கள்? என்ன பெயர்?" என்று கேட்டாள் குமுதா.

"என் தகப்பனார் இருக்கும் 'ராஜேந்திரா மில்'லின் முதலாளி சந்தான கோபாலனின் மனைவி ஆண்டாள் அம்மாள்."

"விவேகாநந்தபுரமா?" என்று கேட்டாள் குமுதா.

லக்ஷ்மி குனிந்துகொண்டு தரையில் திருஷ்டியை லயிக்க விட்டிருந்ததைப் பார்த்தால் அந்த ஆண்டாள் அம்மாளையே அங்கு கண்டாள்போல் தோன்றியது. "ஆமாம்" என்று அவள் குமுதாவுக்குப் பதிலளித்தாள் தலை நிமிராமலே.

"பொய் சொல்லி ஒருவரைப் பலவந்தமாகப் பெரிய தொகையைப் பெறச் செய்வது அழகா?" என்ற கண்டிப்பான குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினாள் லக்ஷ்மி.

குமுதாவின் கணவன் சாரநாதன் வாசற்படியில் சாய்ந்துகொண்டு நின்றிருந்தான்.

"யார் பொய் சொன்னார்கள், எனக்குச் சகோதரி ஒருத்தி இருந்திருக்கவில்லை என்று உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று தைரியமாகக் கேட்டாள் லக்ஷ்மி.

"துப்புத் துலக்க வேண்டுமாக்கும்!"

இதற்குள் குமுதா விசித்து அழ ஆரம்பித்துவிட்டாள். லக்ஷ்மி அவளைத்தேற்றினாலும் அவள் தேறவில்லை.

"குமுதா, கிளம்பு, வீட்டுக்குப் போவோம்" என்றான் சாரநாதன்.

குமுதா மறு பேச்சின்றிக் கிளம்பினாள். "நான் வரு கிறேன், லக்ஷ்மி?" என்று மெதுவாகக் கூறினாள் அவள்.

லக்ஷ்மி பேசாமல் குங்குமம் மட்டும் கொடுத்தாள்.

சாரநாதன் தம்பதிகள் போன பிறகு தான் சக்ரபாணி யின் குரல் கிளம்பிற்று. "உன் நாடகத்தின் விளைவைப் பார்த்தாயோ இல்லையோ! அவன் என்னைப்பற்றி என்ன நினைக்கமாட்டான்? முகத்தில் கரி பூசிக்கொண்டாகி விட்டது. இதற்குத்தான்..."

"...'தையலர் சொற்கேளேல்' என்று வாக்குப் பிறந்ததாக்கும்" என்று முடித்தாள் லக்ஷ்மி. அவள் பேச்சில் உயிர் இல்லை. பன்னிரண்டு மைல் நிற்காமல் ஓடி வந்தும் தோற்றுவிட்டவனின் களைப்பு அவளிடம் காணப்பட்டது.

"இனி அவர்கள் நம்முடன் சிநேகம் வைத்துக் கொள்ள மாட்டார்கள்" என்றான் சக்ரபாணி.

"போனால் போகட்டுமே. நான் நல்லதை எண்ணித் தான் செய்தேன்" என்றாள் லக்ஷ்மி.

அன்று அதற்கு மேலே பேசவேயில்லை இருவரும். சக்ரபாணி கோபமாகவே இருந்தான். உற்சாகமின்றி இயந்திரம் போல நடந்து பண்டிகையை ஒப்பேற்றினாள் லக்ஷ்மி.

அதன் பிறகும் அவள் மனம் அமைதியின்றி அலைந்தது. சக்ரபாணி கூறினது போலவே, சாரநாதன் தம்பதிகள் அதன் பிறகு இவர்கள் வீட்டிற்கு வாரவு மில்லை, சாரநாதனும் சக்ரபாணியை வேறு எங்கும் சந்திக்கவுமில்லை. பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காய் முடிந்ததே என்று லக்ஷ்மி உள்ளூர வருத்தப் பட்டாள்.

தீபாவளி கழிந்து ஒரு வாரம் சென்றது. உற்சாக மின்றி, பேச்சின்றி, சிரிப்பின்றி இவர்கள் இருவரும் அமர்ந்திருக்கையில் வாசலில் தந்தி பியூன் மணி அடிப்பது கேட்டு ஓடினார்கள் இருவரும்.

"தந்தி மணியார்டர், சார்" என்று குரல் கேட்டது.

"நீயே போய் வாங்கிக்கொள். எதிரே வந்துகொடுகக் இஷ்ப்படாமல் சாரநாதன்தான் அனுப்பியிருப்பான். உன் தெய்வச் செயலுக்காக ஒரு கிரீடம் செய்து மாட்டிக் கொள்!" என்று கூறி விட்டுச் சக்ரபாணி உள்ளே போய் விட்டான்.

தந்தியும் லக்ஷ்மியின் பெயருக்குத்தான் வந்திருந்த்து. அவள் பணத்தைப் பெற்றுக்கொண்டு நிதானமாகத் தந்தியைப் படித்தாள். "உடனே புறப்பட்டு வரவும்- அப்பா" என்றிருந்தது.

அவள் உடல் பதைக்கக் கணவனிடம் சென்றாள். அவனும் அந்த வினாடியில் கவலை மிகுந்து அவளுடன் ஒன்றிப் போனான் போலும். இருவரும் அன்றே விவேக நந்தபுரம் புறப்பட்டுச் சென்றனர்.

அவர்கள் எதையெல்லாமோ கற்பனை செய்து எதிர்பார்த்துப் போனார்கள். ஆயினும் அங்கே அவர்கள் கண்டது அவர்கள் கற்பனையை மிஞ்சியது.

லக்ஷ்மியின் பிறந்த வீட்டுக்கூடத்தில் சம்பிரமமாக வீற்றிருந்தனர் குமுதாவும் சாரநாதனும். இரு குடும்பங் களும் அவர்களைச் சுற்றிக் குழுமியிருந்தனர்.

இவர்கள் உள்ளே சென்றதும் எல்லோரும் மகிழ்ச்சி யோடு அழைத்தனர். லக்ஷ்மிக்கும் சக்ரபாணிக்கும் பிரமிப்புத் தீர்வதற்குள் சாரநாதன் எழுந்து, "ஸ்ரீமதி தந்திர லக்ஷ்மியும் ஸ்ரீமான் சக்கிரமும் வருவதைக் காண்க!" என்று உருக்கக் கூவிவிட்டு, சற்றுக் குரலைத் தாழ்த்தி, "லக்ஷ்மி சுண்டு விலை ஆட்டினால் ஆடும் சக்கிரம் இது" என்று முடித்தான்.

எல்லோர் மனமும் அப்பொழுது எழுந்த சிரிப்பில் தெளிந்துவிட்டது.

ஆண்டாள் அம்மாள் லக்ஷ்மியை அணைத்துக் கொண்டாள். "என் கண்ணே! எத்தனை நாட்களாகக் குமுதாவைப் பார்க்காமல் என் தாயுள்ளம் ஏங்கித் தவித்தது! நீதான் உண்மையில் என் குழந்தை!" என்று உணர்ச்சி பூர்வமாகப் பேசினாள்.

"குமுதா, உன் தாயாரா?" என்று கேட்டாள் லக்ஷ்மி.

"அன்றைக்கு அப்படி வந்து விட்டாயே, அது அழகா?" என்று நண்பனை நோக்கிக் கேட்டான் சக்ரபாணி.

"நான் என்ன செய்வது-நாங்கள் இங்கே புறப்பட்டு வர ரயில் முக்கால் மணிக்குள் கிளம்பிவிடும் என்று எனக்குத்தெரியும். சாவகாசமேது, கட்டின கோடித் துணியோடல்லவா இங்கே வந்து விட்டோம் -வீட்டுக்குக் கூடப் போகவில்லையே?" என்றான் சாரநாதன்.

"சரிதான். இத்தனை வருஷங்களாக விட்டுப்போன வேஷ்டிகளையெல்லாம் வசூலித்து விட்டாயாக்கும்?" என்றான் சக்ரபாணி.

எல்லோரும் சிரித்தனர்.

(சுதேசமித்திரன்– தீபாவளி மலர், 1954)

------------